உ

குருபாதந் துணை

ஸ்ரீமத் ஞானசம்பந்ததேசிக சுவாமிகள்மீது

சம்பந்தசரணாலய முனிவர்

அருளிச்செய்த

# சிகாரத்னமாலை.

இஃது

திருக்கயிலாய பரம்பரைத் திருத்தருமபுர ஆதீனத்து

23-வது மஹா ஸந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ. சுப்பிரமணியதேசிக சுவாமிகள்

திரு ஆக்ஞையின்படி

ஸ்ரீகாழி வித்வான்

ப. அ. முத்துத்தாண்டவராய பிள்ளை

அவர்களால்

சென்னை, இம்பீரியல் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1930

இஃது திருத்தரும்மபுர ஆதீனத்து 23-வது மஹா ஸந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் அவர்களுக்கு உரிமைசெய்யப் பட்டது.

உ

குருபாதந் துணை

கந்தபுராணச் சுருக்க மியற்றிய

* சம்பந்தசரணாலய முனிவர்

ஞானசம்பந்த தேசிகர் மீது

அருளிச்செய்த

# சிகாரத்னமாலை.

ஆதிகா லந்தொடுத் தடியனுன் னடியிணைக்
காளாக மீளா தபே
ரன்புசெய்† தாயதன் பின்புமுத் தமிழிலு
மதிகரிக் கப்பு ரிந்தா
யீதெலாந் தெளிவுறச் சாத்திரம் படியென்றி
சைத்தினிமை தந்திருந் தாய்
இத்தனைவரக் கருணை வைத்தனையு னக்குநா
னென்னகைம் மாறு செய்வேன்

---

* சித்தர் அம்பலவாண தம்பிரானென்ற வெள்ளியம்பலவாண சுவாமிகளிடம் படித்துத் தேர்ந்துதெளிந்த முக்கிய சிஷ்யர்கள் பன்னிருவரில் மேற்கண்ட சம்பந்த சரணாலயமுனிவரும் ஒருவரெனக் கர்னபரம்பரை.

† செய்தா, செய்தேன

வேத முடி வானபொரு ளேதென்று மாதவர்கள்
வினவவட வானீ ழலின்
வீற்றிருந் தறநான்கு தோற்றுவித் துந்தயவு
மிகுந்தியான் மீண்டு மீண்டுந்
தீதகல நரர்வடிவெ டுத்தளவி றந்தோர்கள்
சிவஞான மருவ வந்தாய்
சீர்தருமை வாழவருண் ஞானசம் பந்தனுந்
தேசிக சிகா ரத்னமே. 1

அன்றுதொட் டின்றளவு மெண்பத்து நான்குநூ
றுயிரஞ் சென்ம* பேதத்
தடியனே னடிபட் டலைந்துளே னென்படத்தி
யணுவளவும் வந்த தில்லை.
யின்றுதொட் டினிமேலு மிதனையே யின்பமென்
றினிதினிதெ னக்கரு துமோ
ரேழைக் கிரங்கிவினை தாழத் துரந்துகதி
யேறப்ப ணித்தரு ளுவாய்
நன்றிக்கு வித்தாகு மணிஞான மணிகூட
னந்தாத சிந்தா மணி
நாவலர்கள் யோகர்சிவ ஞானிக டவத்தோர்க
ளுடிநுஞ் சூளா மணி

* செனன

தென்றமிழ்க் கடல்வடக லைக்கட லிரண்டினுந்
திகழ்மாசி லாமணி யெனுஞ்
சீர்தருமை வாழவருண் ஞானசம் பந்தனுந்
தேசிக சிகா ரத்னமே. 2

விஞ்சுதிரை யெரிபவக் கடலிற் குளித்துமிகு
வெஞ்சினக் கோப மாகும்
விரியெரி யினிற்கருகி வெகுகால மிப்படி
மெலிந்தே னலிந்தே னெனை
யஞ்சுபுலன் வென்றுநின் னருணிலைந் தனுதினமு
மானந்த மாக்கட லுளே
யமைவுறத் தூங்குமுன் னடியவர் குழாத்தில்வைத்
தகமகிழ்ந் தருள்வ தெந்நாள்
கொஞ்சுகிளி மறையோது கூடலம் பதியினுங்
குலவுகம லாபுரி யினுங்
குருமணிய தித்தொளிர்கண் மருவுமா ளிகைகளுங்
கொண்டுறவழ் மண்ட பஞ்சேர்
செஞ்சொலவர் பரவவளர் தருமைநக ரினுமருட்
செங்கோ னடாத்து குருவே
சீர்தருமை வாழவருண் ஞானசம் பந்தனுந்
தேசிக சிகா ரத்னமே. 3

பாகுபடு மொழிமாதர் தமதாசை முதலான
பலவாசை யுந்து றந்தே
பாதபங் கயமலரி லாதரவு பண்ணலும்
பதைபதைத் துருகி யெழலுந்
தாகமுடி பெரியபரி பாகமொடு மோகமுந்
தாரக மிலாத ருளுவார்
தந்திவை யெலாமுனது சுந்தரத்தி ருவார்த்தை
தங்கவிங் கருள்கூ றுவாய்
ஆகமபு ராணங்கள் வேதங்கள் சகலகலை
யாய்வதுவு முனது புகழே
யாயுநற் கலைவிரித் தறிஞோர்கள் புகழ்வதற்
கையமுள தோவில்லை காண்
தேகமிது பொய்யென்று மெய்யொன்று சித்தைச்சி
வாகமிக ணின்று போற்றுஞ்
சீர்தருமை வாழவருண் ஞானசம் பந்தனுந்
தேசிக சிகரீ ரத்னமே. 4

கானமே வியதோர் கருங்குயில் பசுங்கிளி
கடுக்குடி யிருந்த பகுவாய்க்
கட்டரவ மட்டி லுயிர் கண்டுண்ட பூனையெலி
காமருச கோரமு முயர்

ஞானமே வியதோர்ப தம்பெறவு மருள்செய்த
நன்மையா லெனையு னடியார்
நடுவினு ளிருத்தியுன தடிமையாக் குவையந்த
நாளெந்த நாளறி கிலேன்
வானமே வியதோரி ளம்பிறைவ ளம்புனலு
மதுவொழுகு கொன்றை மலரு
மங்கையொரு பாகமெனு மங்கமுஞ் செங்கையனன்
மாறிவந் தூறு மன்பாற்
சேனையடி யவர்கட்கு நானுவி தக்கருணை
செய்தசை தன்ய குருவே
சீர்தருமை வாழவருண் ஞானசம் பந்தனுந்
தேசிக சிகா ரத்னமே. 5

பூரவுபதி பசுபாச மறியாத நெறியோடு
பார்முழுதி னுந்தி ரிந்து
பரமநா மென்றுபோ மென்றுபா சவ்வினை
பிணிமினுல கீர்க ளென்றென்
றுரைசெய்து குரல்கம்பி யொருபொருளு மடையாம
லுடைமையா லுரைத விர்ந்தே
யூமரா ணோர்பெரிய நாமநீர் வைப்பினி
லுனக்கிணை யெனக்கூடுமோ

வரைகளிற் பொன்மேரு வரைதிரைகள் வருநதியுள்
வளர்கங்கை புங்க வற்குண்
மாதேவன் முதலான வாறுபோ லறுசமய
மாபினுட் கருவ கற்றுஞ்
செருவான கருவியெனு மொருஞான சமயமுதல்
சென்றிட வுதித்த குருவே
சீர்தருமை வாழவருண் ஞானசம் பந்தனுந்
தேசிக சிகா ரத்னமே. 6

உலகின்மா னிடரா யுதித்தவர்க ளெல்லோரு
மொருபிறப் பொருவடி வரா
யொப்பரா யினுமிக்கு யர்ந்தவரிழி ந்தவர்க
ளுண்டென்று கண்டு கொளலால்
இலகுதே சிகரா மெனப்பெய ருனைப்போல
வெழில்பெறப் புனைவ ரெனினு
மென்றனைப் பிணிகொளு மூன்றனக் கிணையாக
வேத்துநாத் தோற்று விடுமே
கலகவைம் புலனலைய நிலையிதென் றடியருங்
கருணைமலை நிலவிப் பவக்
காடுவெட் டிப்பாம் வீடுறும் படிகடைக்
கண்ணலைத் திடுமண் ணலே

திலகமென் றுலகுபுகழ் தாவளந் தாநின்ற
தென்கமலை நற்கூடல்வண்
சீர்தருமை வாழவருண் ஞானசம்பந்தனுந்
தேசிக சிகா ரத்னமே. 7

கல்வியிற் கவிதையிற் போதனையி னிற்கலை
கருத்துறு மருத்தத் தினிற்
கவிவாணர் புகழ்மிகு நவமான பொருளொடு
கலந்தகூர் மையினி லவையைச்
சொல்வளம் பெறவிரித் தியாவருந் தெளிவுறச்
சொல்லும்பிர சங்கத் தினிற்
றொல்லுலகி லொருவர்க்கும் வல்லமைக ளிலையென்று
தோன்றியவை தோன்ற வந்தாய்
நல்வரம் பெறுசெவ்வெ ணுந்துங்க மங்கையொளி
நளினமணி *முகைநகை யென
நாடிவரு மளிகளெனு மாடவர்கள் புடைமொய்ப்ப
நானில மெனுங்கு டிக்குச்
செல்வமென வளர்கமலை பாண்டிநா டேத்தவரு
திருமலிந் திட்ட மதுரை
சீர்தருமை வாழவருண் ஞானசம் பந்தனுந்
தேசிக சிகா ரத்னமே. 8

---

* முக

கோவாத மூவாத மணியே மருந்தே
குருந்தடி யிருந்த கருணைக்
குன்றே யெனப்பிடித் தன்றேயு னக்கடிமை
கொண்டருள் குணக்கொண் டலே
யோவா தினித்தினித் துள்ளூறி* யள்ளூறு
மொழுகுமது ரக்கனி யென
வுன்னையுன் னுதன்னி யென்னையுன் னுதநெறி
யொருமொழியி னுன்மொ ழிந்தாய்
நாவாண னொருபுறம் பாமாலை பொழியவொரு
ஞாங்கர்புட் டாங்கு சொல்வோர்
நகைமணிக ளுமிழ்மகுட சேடனு யிராநாவி
னுலிவ ரெனத்து திப்பத்
தேவார மொருபுறமு ழங்கவொரு புறமடியார்
சேவித்து நின்று வாழ்த்துஞ்
சீர்தருமை வாழவருண் ஞானசம் பந்தனுந்
தேசிக சிகா ரத்னமே. 9

கொன்றையுன் றார்விடைக் கொடியுனது கொடிசார்ந்து
கூர்ந்தவெண் ணீறு தவளக்
குளிர்மதிச் சடைமுடிப் பொன்மகுட மாபரணங்
குலவுகண் டிகைமா லைமால்

* யள்ளூறு

வென்றவடி யார்களுன்† வீரதண் ணளியுனது
வெண்குடைநின் விமல சத்தி
விரிபுவன மண்டங்கள் கொண்டசெங் கோன்ஞான
வேந்தனென் றுனைய டைந்தே
னன்றுதீ தெனுமிரு விலங்கின முறித்துவர
நலிகுறும் பறவெ றிந்து
நாடொறு முத்தியினை நாடுறு மருட்செல்வ
நான்மறைச் செங்க ரத்தாற்
சென்றுதவி யின்றெனது மூடமா கியவறுமை
தீரக்கொ டுத்தரு ளுவாய்
சீர்தருமை வாழவருண் ஞானசம் பந்தனுந்
தேசிக சிகா ரத்னமே. 10

கயிலாய மலையுன்றி ருக்கோயி லம்பலங்
காசிகம லாலய முதற்
கருதுதெய் வீகதலம் யாவையும் யாவருங்
காணவரு கொலுமண் டபம்
பயிலும்வா னோர்கங்கை யாடுமஞ் சனசாலை
பருதிமதி யிருவி ளக்காம்
பகர்திகம் பரஞான வுருநினது பெருமையைப்
பகருதற் கெளிதா குமோ

---

† யார்களுன், யார்களுளம்.

குயில்கூவ மயிலால வஞ்சுகஞ் செஞ்சொற்
குழாம்பல மிழற்ற நெடுமால்
கொண்டதிண் டோண்மலர்த் தண்டுழா யந்தொடைக்
கொத்தினுட் பத்தி பாயுஞ்
செயிர்தீர்ம ணிக்கொத்தெ னப்பொழிலின் மிடைதருஞ்
சிறைவண் டலம்பி நிற்குஞ்
சீர்தருமை வாழவருண் ஞானசம் பந்தனுந்
தேசிக சிகா ரத்னமே. 11

சிகாரத்னமாலை முற்றிற்று.

குறிப்பு:—இச்சம்பந்தசரணாலய முனிவரியற்றிய சிகாரத்னமாலையும் கந்தபுராணச் சுருக்கமும் தவிர்ந்த வேறு நூல் அல்லது தனிப்பாசுரங்கள் இப்போது அகப் படவில்லை. இம்முனிவரிடம் படித்திருந்த வித்து வான்கள் சிலர் 7-வது, 8-வது 9-வது, குருமூர்த்திகள் காலங்களில் மைசூர் பக்கங்களிலும், இங்கும் இருந்தார் கள். மற்ற விபரம் ஆதீனகர்த்தரவர்களால் இனிப் பிரசுரிப்பிக்கப்படும் கந்தபுராணச் சுருக்கவுரைப் பாயி ரத்துட் காணலாகும்.

ஞானசம்பந்தசுவாமிகள் திருவடிதுணை.

The Imperial Printing Works, 23, Davidson St., Madras.